# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 4 | இதழ்: 10 | டிசம்பர் 2017 | வருடச் சந்தா ரூ. 100/- Volume : 4 | Issue: 10 | December 2017 | Annual Subscription Rs. 100/-



## ஜாதக ஜோதிடம்

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்



நமது பிராரப்த கர்மா - தலைவிதி எவ்வாறு அமைந்துள்ளது என்பதை கூறுவதுதான் ஜாதகம். கடந்த காலத்தை சரியாக கூறும் ஜோதிடம், எதிர்காலத்தை குறித்து கூறுபவைகளில் பெரும்பாலும் சரியாக இருக்காது. காரணம் விதிக்கப்பட்ட பிராரப்த கர்மாவை விட நம் கைகளில் இருக்கும் ஆகாமியம் அதிகம் ஆற்றல் உடையது. ஆகவே நமது முயற்சியை நம்புமளவிற்கு ஜாதக ஜோதிடங்களை நம்ப வேண்டாம். நமது நன்முயற்சியை தூண்டும் அளவிற்கு வேண்டுமானால் அதனையும் நம்பிக்கைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

- ஸ்ரீ பகவத்

## ஸ்ரீ பகவத் பவனில் டிசம்பரில் 2 நாள் ஞான முகாம்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

www. pravaagam.org www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by
SRI SIDDHASH GRAPHICS, Salem.
Cell : 90926 46260, 86800 06868


ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் வருகின்ற **டிசம்பர் மாதத்தில்** சேலம், ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

| | |
|---|---|
| இடம் | : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106. |
| நாள் | : 30.12.2017 சனி முதல் 31.12.2017 ஞாயிறு வரை |
| நேரம் | : சனி காலை 8.30 மணிமுதல் ஞாயிறு மதியம் 3.00 மணிவரை |

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள், வெள்ளிக்கிழமை மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். ஞான முகாமில் கலந்து கொள்ள கட்டணம் எதுவும் இல்லை.

**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.** **அனுமதி இலவசம்**

ஞான முகாமைத் தொடர்ந்து 1.1.2018 ஆங்கில புத்தாண்டு அன்று ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன் தங்க ஆர்வமுள்ளவர்கள் தங்கிச் செல்லலாம். இதனை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அனைவரும் வருக! ஞானத்தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித் தனி இட வசதி உள்ளன.
- ஞான முகாமில் 70 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவிற்கு**

- கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை Dec Gnanamuhaam என்று Type செய்து SMS அனுப்ப வேண்டிய எண் : 99422 19065
- முன் பதிவிற்கு இறுதி நாள் 15.12.2017

## ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவனின் ஒவ்வொரு மாதமும் ஞான முகாம் கட்டணமின்றி இலவசமாக நடந்து வருகிறது.

ஆன்மிக வாழ்வுக்கு மட்டுமல்லாது ஒட்டுமொத்த மனித குலத்தின் பிரச்சினைக்கெல்லாம் தீர்வாக அமைவது ஞானமும் விடுதலையும். இதனை தொண்டாகவும் இலவசமாகவும் வழங்குவதே மனித குலத்திற்கு நாம் ஆற்றும் சிறந்த பணியாகும். இப்பணியைச் செய்ய நாம் எதிர்கொள்ளும் செலவுகளை ஸ்ரீ பகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே எதிர்கொண்டு வருகிறோம். அந்த வகையில் ரூபாய் 25,000/- வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக தன்னை இணைத்துக்கொண்ட திரு. **சுரேந்திரன்** சென்னை அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாகவும், புறவலர்களாகவும் இணைந்து ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்
Sri Bagavath Mission



# ஜாதக ஜோதிடம்



- ஸ்ரீ பகவத்

ஜோதிடம் பற்றிய விவரங்களை நாம் ஏற்கனவே எழுதியிருக்கும் ஆகாமிய கர்மா என்ற நூலில் விவரித்துள்ளோம்.

இருந்தாலும் ஜாதகம் சம்பந்தமான கேள்விகள் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆகவே இந்தக் கட்டுரையை எழுத நேர்ந்துள்ளது.

இப்பிறப்பில் நமக்கு என்னவெல்லாம் நடக்கும் என முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டதை நாம் பிராரப்தம் அல்லது பிராரப்த கர்மா என்று கூறுகிறோம்.

முற்பிறவிகளில் நாம் செய்திருந்த சில கர்மாக்களின் தொகுப்பாக அமைந்துள்ளதுதான் இந்த பிராரப்த கர்மா.

இந்த பிராரப்த கர்மாவைத்தான் நமது தலைவிதி என்று கூறுகிறோம்.

நமது பிராரப்த கர்மா - தலைவிதி எவ்வாறு அமைந்துள்ளது என்பதைக் கூறுவது தான் ஜாதகம்.

நாம் பிறக்கும் போது நவக்கிரகங்கள் என்ன வரிசையில் அமர்ந்திருக்கின்றன. நட்சத்திரம் என்ன அமைந்துள்ளது என சில கணக்குகளை வைத்து நம்முடைய ஜாதகங்கள் கணிக்கப்படுகின்றன. அந்தக் கணிதத்தின் மூலம் நமது வாழ்வில் நடக்கவிருக்கும் நல்ல மற்றும் கெட்ட நிகழ்வுகளையும் கணக்கிட்டு விடுகின்றனர்.

பிராரப்த கர்மாவை - நமது விதியை நாம் அனுபவித்து ஆக வேண்டுமா?

விதியை வெல்ல முடியாதா?

விதியை வெல்வது என்றால், நமக்கு ஏற்படவிருக்கும் தீய நிகழ்வுகளையெல்லாம் நடக்க விடாமல் செய்வது தான் விதியை வெல்வதாகும்.

விதியை வெல்லவே முடியாது; நடப்பதெல்லாம் நடந்தே தீரும் என்றிருந்தால் எவரும் ஜாதக ஜோதிடங்களில் அக்கறை காட்டவே மாட்டார்கள்.

எனக்குத் தெரிந்த ஒருவருக்கு ஜாதகத்தில் தோஷம் இருந்தது. அதனால் அவருக்குத் திருமணமாகாமல் தள்ளிப் போய்க் கொண்டே இருந்தது. ஜாதகப் பொருத்தம் ஏற்படவில்லை.

என்ன பரிகாரம் செய்வது?

அவர் போலியாக இரண்டு மூன்று ஜாதகங்களைத் தயாரித்துக் கொண்டார். உடனடியாகத் திருமணமும் நடந்துவிட்டது.

இப்படித்தான் பரிகாரம் காண வேண்டுமா?

ஜாதக ஜோதிடங்களில் பரிச்சயமுள்ளவர்கள் ஒரு விவரத்தைக் கவனித்திருப்பார்கள்.

முன்பின் அறிமுகமில்லாத ஒரு ஜோதிட அறிஞரிடம் நீங்கள் உங்களுடைய ஜாதகத்தைக் காட்டுவீர்களேயானால் அவர் நேரிலிருந்து பார்த்ததைப் போல் உங்களுக்கு நடந்ததையெல்லாம் கூறிவிடுவார்.

உங்களுடைய ஜாதகக் கட்டங்களைக் கணிதமாக்கி, அந்தக் கணிதத்தின் அடிப்படையில் மட்டுமே உங்களுக்கு நடந்ததைத் துல்லியமாகக் கூறிவிடுகிறார்.

அதே கணிதத்தை அடிப்படையாகக் கொண்டு, இனி வரும் எதிர்காலத்தில் உங்களுக்கு என்னவெல்லாம் நடக்கும் என்பதையும் கூறுவார்.

அவருக்கு நேரடியாக எதுவுமே தெரியாது. அவருக்குத் தெரிந்தது கணிதம் மட்டுமே. அந்தக் கணிதத்தைக் கொண்டு தான் இதுவரை நடந்ததையும் கூறுவார். இனிமேல் நடக்கப் போவதையும் கூறுவார்.

கடந்த காலத்தைப் பொறுத்து அவர் கூறியவை அனைத்தும் சரியாகவே இருக்கும். ஆனால் எதிர்காலம் குறித்துக் கூறியவைகளில் பெரும்பாலும் சரியாக இருக்காது.

நான் பொய் கூறலாம். நீங்கள் பொய் கூறலாம். ஆனால் கணிதம் பொய் கூறுமா?

அந்தக் கணிதம் எப்படி இங்கே பொய்யானது?

உண்மையில் ஜாதகமும், ஜாதகக் கணிதமும் முக்கியமானதல்ல. அவை சம்பந்தப்பட்ட கர்மா தான் முக்கியமானதாகும்.

பிராரப்த கர்மாவின்படி விதிக்கப்பட்டவை அனைத்தும் எந்த மாற்றமும் இல்லாமல் அப்படியே நடப்பதாக வைத்துக் கொள்வோம்.

அப்படியானால் புதிய கர்மா ஏற்படுமா?

ஆகாமிய கர்மா எனப்படும் புது வினை ஏற்படுமா?

அனைத்தும் விதிக்கப்பட்டபடியே நடப்பதாயின் நமக்கு அங்கு வேலையே இல்லை. புது கர்மாவுக்கு - ஆகாமிய கர்மாவுக்கு இடமே இல்லை.

விதிக்கப்பட்டதையும் மீறி புதியதாக ஏதாவது ஒரு கர்மா ஏற்படுமானால் அது விதிக்கப்பட்டதையும் மீறியதாகத்தான் இருக்க முடியும்.

விதியாகச் செயல்படும் பிராரப்த கர்மாவும், நாமாகச் செயல்படுத்தும் ஆகாமிய கர்மாவும் சம பலத்துடன் இருக்குமேயானால்

இரண்டுமே நடக்காமல் போய்விடும்.

இரண்டுமே தலா 50 சதவீதம் சக்தியுடன் செயல்படுமேயானால் இரண்டுமே பலமற்றுப் போய்விடும்.

ஏதாவது ஒன்றுக்கு 10 சதவீதம் சக்தியானது அதிகமாக இருந்தால்தான் அடுத்ததையும் மீறிச் செயல்பட முடியும்.

ஆகாமிய கர்மா 10 சதவீதம் அதிக ஆற்றல் பெறுமேயானால் அதனுடைய சக்தி 50+10=60 சதவீதம் ஆகிவிடுகின்றது.

அந்நிலையில் பிராரப்த கர்மாவின் பலம் 40 சதவீதம் ஆகக் குறைந்து விடுகின்றது.

ஆகாமிய கர்மாவின் தாக்கத்தினால் பிராரப்த கர்மா பலமிழந்து விடுகின்றது. விதிக்கப்பட்டது நடக்காமல் போய்விடுகின்றது.

உங்களுக்கு 30 வயது ஆகும் போது பலகோடி ரூபாய் மதிப்புள்ள சொத்துகள் உங்களுக்கு வந்து சேரும் என்றும், உயர் பதவிகளும் புகழும் உங்களுக்கு வந்து சேருமென்றும் உங்களுடைய ஜாதகம் கூறுவதாக வைத்துக் கொள்வோம். இதுதான் உங்களது பிராரப்தம். இது தான் உங்களது விதி.

இதை வேண்டாமென்று கூறுவீர்களா?

இவை எதுவும் வந்து விடக்கூடாது என்று பிரார்த்தனைகளும், பரிகார பூஜைகளும் செய்வீர்களா?

கொஞ்சம் முன்கூட்டியே வந்தால் பரவாயில்லை என்று தான் பிரார்த்தனை செய்வீர்கள்.

பிராரப்தப்படி நமக்கு வரவேண்டிய நல்லவைகளெல்லாம் அப்படியே வந்து விடுகின்றனவா?

ஜாதகப்படி நமக்கு வரவேண்டிய நல்ல பலன்கள் வராமலேயே போய்விடுகின்றன.

இதற்கு எது காரணம்?

ஜாதகம் நமக்குச் சாதகமாகவே உள்ளது. நமது பிரார்த்தனையும் அதை வேண்டியே அமைந்துள்ளது.

அப்படி இருந்தும் அதனை மீறி அந்த நல்ல பலன்கள் நடக்காமல் போயிருந்தால் அதன் காரணமென்ன?

ஜாதகத்தையும், பிரார்த்தனையையும் மீறி இந்த நல்ல பலன்களையெல்லாம் தடை செய்யக்கூடிய ஆற்றல் எவற்றுக்கு உள்ளது?

அத்தகைய ஆற்றலுடையது தான் ஆகாமிய கர்மா.

இப்பிறவியில் நாம் செய்யும் தீவினைகள் யாவும் இப்பிறவியில் பிராரப்தப்படி நமக்கு வரவேண்டிய நன்மைகளைப் பாதிப்படையும்படி செய்து விடுகின்றன. நமக்கு நடக்க வேண்டிய நல்லவை எவையும் நடக்காமல் போய்விடுகின்றன.

இப்படி நமக்கு வரவேண்டிய நல்லவைகளைத் தடை செய்யும் வல்லமையுள்ள ஆகாமிய கர்மாவுக்கு

நமக்கு வரவேண்டிய தீமைகளைத் தடுத்திடும் ஆற்றலும் உண்டு.

இப்பிறவியில் நாம் ஆற்றும் நல்வினைகள் யாவும் நமக்கு வரவேண்டிய கஷ்ட நஷ்டங்களையும் தடுத்து விடுகின்றன.

ஜாதக ஜோதிடங்கள் உண்மையானதாகவே கூட இருக்கலாம்.

ஆனால் அதனை முழுமையாக நம்பி விடமுடியாது.

இப்படித்தான் சிலர் அருள்வாக்கு கேட்பார்கள்.

அது அருள்வாக்காக இருந்தாலும் சரி, ஜாதக ஜோதிடங்களின் வாக்காக இருந்தாலும் சரி,

எதிர்கால நிகழ்வுகள் அனைத்தும் ஆகாமிய கர்மாவுக்குக் கட்டுப்பட்டவையே ஆகும்.

இந்த விவரத்தை மனதில் கொண்டு எந்த அளவுக்கு ஜாதகத்தைப் பயன்படுத்தலாமோ அந்த அளவுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஒரு பெண்ணையோ, மாப்பிள்ளையையோ பார்த்துத் தேர்வு செய்ய வேண்டியுள்ளது.

அவர்களை நாம் அளவுக்கு அதிகமாக விசாரிக்க முடியாது.

ஜாதக அமைப்பை வைத்து குண நலன்கள், ஆரோக்கியம் ஆகியவற்றை ஓரளவு கணித்துக் கொள்ளலாம்.

ஆனால் அனைத்துமே ஆகாமிய கர்மாவுக்குக் கட்டுப்பட்டவையானதால்

ஜாதக ஜோதிடங்களுக்கு இரண்டாந்தர முக்கியத்துவம் கொடுத்தால் போதும்.

சிலர் தங்களுடைய ஜாதகத்தில் ஏழரைச் சனி இருப்பதாகக் கூறி தாங்கள் செய்யும் தொழில்களையெல்லாம் முடக்கிப் போட்டுவிடுவார்கள்.

சனி திசை முடிந்த பிறகு தான் தொழில்

செய்யப் போவதாகக் கூறி விடுவார்கள்.

ஏழரை திசையை விடப் பெரியது ஆகாமிய கர்மா அதை நம்பி எவர் வேண்டுமானாலும் முன்னேற்றம் காண முடியும்.

நாம் செய்திருக்கும் தீவினையின் காரணமாக நமக்கு மோசமான கர்மாக்கள் சேர்ந்திருக்கலாம்.

ஆனால் நம்மிடமுள்ள மோசமான கர்மாக்கள் எவையும் நமக்குத் தண்டனையாகக் கொடுக்கப்படவில்லை.

தண்டனை அனைத்தும் நம்மையோ அல்லது மற்றவர்களையோ திருத்தும் நோக்கத்தில் கொடுக்கப்படுபவை.

ஆனால் நம்மைத் திருத்தும் நோக்கத்தில் கர்மாக்கள் கொடுக்கப்படுவதில்லை. ஏனெனில் நாம் என்ன தீவினை செய்ததற்காக இத்தகைய கர்மா கொடுக்கப்பட்டுள்ளது என்பதே நமக்குத் தெரியாது.

அதனால் நமக்குக் கொடுக்கப்பட்ட கர்மாக்கள் யாவும் நம்மை நல்வழிப்படுத்துவதற்காகக் கொடுக்கப்பட்டவையாகவே எடுத்துக் கொள்ள வேண்டும்.

புத்தர் நல்ல சூழ்நிலையிலேயே வளர்க்கப்பட்டார். ஆனால் அவர் மோசமான சூழ்நிலையைச் சந்திக்கும் போது தான் அவரால் புத்தராக முடிந்தது.

நல்லவையும் தேவைப்படுகின்றன. மோசமானவையும் தேவைப்படுகின்றன.

அனைத்தையும் நாம் நன்மை தரும் வகையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

நமக்கு வரக்கூடிய மோசமான நிகழ்வுகளை மாற்றுவதற்கு நாம் எத்தகைய நல்வினைகளை ஆற்ற வேண்டும்?

மோசமான சூழ்நிலை நமக்கு ஏற்படுவதற்கு முன்பே நற்செயல்களைச் செய்து நல்வினை ஆற்றக்கூடிய சூழ்நிலைகளை இயற்கையே நமக்கு வழங்கி விடுகின்றது.

அதனைப் பயன்படுத்தி நம்மால் முடிந்த நல்வினைகளை ஆற்றுவோமேயானால் நமக்கு வரவிருக்கும் மோசமான சூழ்நிலைகள் வராமலேயே போய்விடும்.

எனினும் நல்வினை ஆற்றுவதை ஒரு வியாபாரத்தைப் போல் செய்யாமலிப்பது நன்று. மனம் விரும்பி நமக்குக் கிடைத்த நல்வாய்ப்புகளை பயன்படுத்துவது நல்லது.

நமக்குக் கொடுக்கப்பட்ட வாய்ப்பைப் பயன்படுத்தி நாம் நல்வினை ஆற்றாத நிலையில் நமக்கு விதிக்கப்பட்ட மோசமான சூழ்நிலைகள் எந்தத் தடங்கலும் இல்லாமல் நமக்கு ஏற்பட்டு விடுகின்றன.

அரசு அலுவலர்கள் பலரைப் பார்க்கிறோம். அவர்கள் தங்களுடைய பதவியை எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும்?

அடுத்தவர்களுக்கு உதவுவதற்காகவே அவர்களுக்கு அந்த வாய்ப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

அவர்கள் தங்களை அடுத்தவர்களுக்கு உதவி செய்யும் ஊழியர்களாகவும் கருதிக் கொள்ளலாம்.

அல்லது அடுத்தவர்களை நிர்வாகம் செய்யும் அதிகாரிகளாகவும் தங்களைக் கருதிக் கொள்ளலாம்.

ஊழியர்களாகக் கருதிச் செயல்படுந்தோறும் அவர்களது செயல்களெல்லாம் நல்வினைகளாகவே அமைந்துவிடும்.

நல்வினைகளைத் தேடி நாம் அலைந்திடத் தேவையில்லை. நம்மைத் தேடி வந்த நல்வினைகளை நன்கு பயன்படுத்திக் கொண்டாலே போதும்.

நான் ஞானத்தைத் தேடி அலைந்த காலத்தில் என்னுடன் நெருங்கிப் பழகிய பலர் ஜோதிடர்களாக இருந்தார்கள்.

ஆனால் நான் ஒருபோதும் எனது ஜாதகத்தைக் காட்டி "எனக்கு எப்போது ஞானம் கிடைக்கும்?" என கேட்டதில்லை.

அவர்களுள் ஒருவர் அருள்வாக்கு கூட கொடுப்பார். "இவருக்கு ஞானம் கிடைக்கும், இவருக்கு இந்தப் பிறவியில் ஞானம் கிடைக்காது, இவருக்கு எந்த வயதில் ஞானம் கிடைக்கும்" என்றெல்லாம் அருள்வாக்கு கூறுவார். ஒவ்வொருவரும் அவரிடம் அது பற்றிக் கேட்டுக்கொள்வர்.

ஆனால் நான் மட்டும் அவரிடம் அது பற்றிக் கேட்டதில்லை.

என்ன காரணம்?

"இந்தப் பிறவியில் உனக்கு ஞானம் கிடைக்காது" என்று அவர் கூறுவாரேயானால் என்ன நடக்கும்?

ஞானத்தைத் தேடும் முயற்சியிலுள்ள ஆர்வம் குறைந்துவிடும். என்ன முயன்றாலும் இப்பிறவியில் கிடைக்காது என்றால் ஆர்வம் எப்படி ஏற்பட முடியும்?

அதுபோல் "இன்னும் ஐந்து வருடங்களில் உனக்கு ஞானம் கிடைக்கும்" என்று கூறுவார்களேயானால் என்ன நடக்கும்?

"அது தான் எப்படியும் கிடைத்து விடுமே. பிறகு எதற்கு ஓடி ஓடி முயல வேண்டும்?" என்ற முயற்சியற்ற தன்மையும் ஏற்பட்டு விடும்.

**நமக்கு விதிப்படி ஏதாவது கிடைப்பதாக இருந்தாலும் அது நமது நன்முயற்சிகளைத் தூண்டுவதன் மூலமே நமக்குக் கிடைக்க வேண்டியதெல்லாம் கிடைக்கும்.**

**ஆகவே நமது முயற்சியை நம்புமளவுக்கு ஜாதக ஜோதிடங்களை நம்ப வேண்டாம்.**

**நமது நன்முயற்சிகளை ஊக்குவிக்கும் அளவுக்கு வேண்டுமானால் அதனையும் நம்பிக்கைக்கு எடுத்துக் கொள்ளலாம்.**





# கேள்வி? பதில்...

## எண்ணத்திலிருந்து விடுபட புறச்செயலில் ஈடுபட வேண்டுமா?

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

**கேள்வி :**

"மனதில் தோன்றும் எண்ணத்திலிருந்து விடுபடுவதற்கு புறச்செயலில் ஈடுபட வேண்டுமா? நான் ஒரு செயல் செய்து அதன் விளைவு தவறாக இருக்கும் பட்சத்தில் நான் என்னை சரி செய்ய வேண்டுமா? என்னுடைய செயலின் அணுகுமுறையை மாற்ற வேண்டுமா?"

ஹோமியோபதி மருத்துவர் ஒருவருடன் நடந்த கலந்துரையாடல் அனைவருக்கும் பயன்படும் என்பதால் அதை இங்கு பகிர்கிறேன். இனி...

**மருத்துவர் :** மனதில் தோன்றும் எண்ணத்திலிருந்து விடுபடுவதற்கு ஏதாவது புறச்செயல் செய்து வருகிறேன். புறச்செயலுக்கு நானே முக்கியத்துவம் கொடுத்து அகத்தில் ஏற்படும் எண்ணத்திலிருந்து விடுபடுகிறேன். புறத்தில் செயல் செய்வதற்கு முழுமையாக முயற்சி செய்கிறேன். நாம் வெளியுலகத்தில்தான் செயல்பட வேண்டும். 'நமக்கு வெளியுலகம் மட்டும்தான் இருக்கிறது. அகத்தில் செய்வதற்கு எதுவும் இல்லை' என்று புறத்தில் செயல்படுவது ஒன்றையே முழுமையாக எடுத்துச் செயல்படுகிறேன். இதில் சில நேரங்களில் வெற்றியும் பல நேரங்களில் தோல்வியும் ஏற்படுகிறது அது ஏன்?

**சரவணன் :** நீங்கள் என்ன நினைத்துக் கொண்டு இருக்கிறீர்கள் என்றால், அகத்தில் ஏற்படும் எண்ணத்திலிருந்து விடுபடுவதற்கு புறத்தில் ஏதாவது செயல் செய்வதன் மூலம் அதை மாற்றி விடலாம் என்று தவறாகப் புரிந்து கொண்டு இருக்கிறீர்கள். ஒரு போதும் பகவத் ஐயா அப்படி கூறவில்லை. அப்படி நம்மால் செய்யவும் முடியாது. அதாவது நமக்கு புறத்தில் வேலை இருக்கும் பட்சத்தில் நாம் செயல்பட வேண்டியுள்ளது. எந்த வேலையும் இல்லாத பட்சத்தில், உதாரணமாக நமது எல்லா வேலையும் முடித்துக் கொண்டு இரவு படுக்கைக்கு சென்று படுத்த பிறகு நமக்கு எண்ணம் வந்தால் என்ன செயல் செய்ய முடியும்? தூக்கத்திற்காக நாம் செயல் பக்கம் போய் எதுவும் செய்ய முடியுமா? உங்களின் கருத்துப்படி படுக்கைக்கு சென்ற பிறகு மனதில் தோன்றும் எண்ணத்திற்கு புறத்தில் என்ன செயல் செய்வீர்கள்? பகல் என்றால் கூட ஏதாவது ஒரு வேலை செய்ய முடியும். இப்பொழுது இரவு படுத்தாகிவிட்டது, இனி என்ன செயல் செய்வீர்கள்?

**மருத்துவர் :** நான் என்ன செய்துவிடுகின்றேன் என்றால் அகத்தில் ஓடிக்கொண்டிருக்கும் எண்ணத்திற்கு நாம் புறத்தில் தானே செயல்பட வேண்டும் என்று எண்ணிக் கொண்டு கட்டிலுக்கு மேலே சுழலும் ஃபேன் சப்தத்தை கேட்பது, புறத்தில் எங்காவது கேட்கும் சப்தத்தை கவனிப்பது என எதையோ செய்யத் தொடங்கிவிடுகிறேன்.

**சரவணன் :** நீங்கள் இப்படி செயல்படுவது கூட எண்ணத்திலிருந்து விடுபடுவதற்காக செய்யும் (Escapism) முயற்சியே ஆகும். மொத்தத்தில் நீங்கள் எண்ணத்தின் தாக்கம் இருக்கக்கூடாது என்பதற்காகவும், எண்ணத்திலிருந்து விடுபடுவதற்காகவும் வெளியில் ஃபேன் சப்தத்தை கேட்பது, ஏதோ ஒரு வெளி சப்தத்தை கவனிப்பது போன்ற ஏதோ ஒரு செயலில் ஈடுபட்டு விடுகிறீர்கள். இதுவும் எண்ணத்திலிருந்து தப்பிக்கும் முயற்சியே.

**மருத்துவர் :** ஆமாம் அப்படிதான் எண்ணத்திலிருந்து தப்பிப்பதற்காகத்தான் செயலில் ஈடுபட்டுவிடுகிறேன்.

**சரவணன் :** இது முற்றிலும் தேவையற்ற வேலை. இரவு படுக்கைக்கு போன பிறகு தோன்றும் எண்ணமே ஒரு தாலாட்டு தான். நீங்கள் அதனை பின் தொடர்ந்து செல்வது மட்டும் தேவையில்லை. நமக்கு தெரியாமல் எண்ணத்தை பின் தொடர்ந்தால் தவறு இல்லை. 'நாம் எண்ணத்தை பின் தொடர்கிறோம்' என்பது நமக்கு தெரிந்த பிறகு அதிலிருந்து விடுபட்டால் போதும். நமக்கு என்ன எண்ணம் வேண்டுமானாலும் தோன்றட்டும். அது தேவையான எண்ணமாக இருந்தாலும் கூட படுக்கைக்கு சென்றபிறகு அதனை பற்றி பிடிக்கத் தேவையில்லை. நீங்கள் 'செயல் செய்து எண்ணத்திலிருந்து விடுபடலாம்' என்ற முயற்சி ஒரு போதும் வெற்றி பெறாது. நமக்கு தோன்றும் அத்தனை எண்ணத்திற்கும் செயல் செய்ய வேண்டுமா? அல்லது புறத்தில் தேவையான செயலுக்கு மட்டும் செயல் செய்ய வேண்டுமா?

**மருத்துவர் :** புறத்தில் தேவைப்படும் செயலுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுப்பதுதான் சரி.

**சரவணன் :** நமக்கு வெளியே ஏதாவது வேலை இருந்தால் செயல் செய்து கொள்வதில் எந்த தவறும் இல்லை. செயல் தேவையில்லாத மற்ற நேரங்களில் மனதில் எண்ணம் வராமல் இருக்குமா? எண்ணம் வரத்தான் செய்யும். நாம் 'எண்ணம் வந்தால் வந்துவிட்டு போகட்டும்' என்று விட்டுவிட வேண்டியதுதான். நமக்கு ஏற்படும் எண்ணத்திலிருந்து விடுபட ஏதாவது செயல் செய்ய வேண்டும் என்று தவறுதலாக புரிந்து இருக்கிறீர்கள். இது தான் தவறு.

**மருத்துவர் :** ஆமாம், அப்படித்தான் நான் தவறாக புரிந்து கொண்டு விட்டேன்.

**சரவணன் :** வெளியில் வேலை இருந்தால், செய்ய வேண்டிய சூழ்நிலை இருந்தால் செய்யுங்கள். இரவு படுக்கைக்கு சென்ற பிறகு என்ன செயல் செய்ய போகிறோம்? ஏதாவது செயல் செய்து கொண்டு இருந்தால் எப்படி தூங்குவது?

**மருத்துவர் :** கண்டிப்பாக, எண்ணம் அதன் போக்கில் தான் ஓடும். நாம் பாட்டிற்கு படுத்துக் கிடந்தால் போதும், வேறு எந்த வேலையும் செய்யத் தேவையில்லை. அப்படி தானே? இது எனக்கு இப்போது நன்றாகப் புரிகிறது. இன்னொரு சூழ்நிலையில் நான் கிளினிக்கில் (Clinic) இருக்கும் போது நோயாளி என்னை பார்க்க வருவார்கள். அவர்கள் என்னுடைய பிரச்சினையையே அப்படியே

அவர்களது பிரச்சினையாக கூறுவார்கள். அது என்னுடைய பிரச்சினையை நினைவுப் படுத்திவிடும். அது என்னை செயல்பட முடியாமல் அப்படியே முடக்கிவிடுகிறது. இங்கு நான் என்ன செய்வது?

**சரவணன் :** நீங்கள் மருத்துவர். அவர் நோயாளி. நோயாளி ஆகிய அவரிடமிருந்து நீங்கள் முற்றிலும் விடுபட்டு அவரது பிரச்சினை என்ன? அவர் அதை எப்படி வெளிப்படுத்துகிறார்? என்பதை கூர்ந்து கவனித்து அதற்கு என்ன மாதிரி மனக்குறியைத் தேர்வு செய்ய வேண்டும் என்பதை உங்களது மருத்துவ அறிவைக் கொண்டு சிந்தித்து, வகைபடுத்தி சரியான மருந்தை தேர்வு செய்து கொடுப்பதுதான் உங்கள் வேலை. நோயாளி உங்களுக்கு இருக்கும் பிரச்சினையைக் கூட அப்படியே கூறலாம். அதனால் நீங்கள் உங்கள் பக்கம் கவனத்தை திருப்பினீர்கள் என்றால் அது உங்களையே முடக்கிவிடும். அதே நேரம் நோயாளியை கூர்ந்து கவனித்து மருந்து கொடுப்பதையும் கெடுத்துவிடும். இந்த இடத்தில் மருத்துவராகிய உங்கள் பணி நோயாளிக்கு சரியான மருந்தை தேர்வு செய்வதே. இதுதான் முக்கியம் என்று முடிவெடுத்துவிட்டால் போதும். நீங்கள் இங்கு ஒரு நீதிபதியை போல் எந்த பக்கமும் சாராது நின்று செயல்படுவது ஒன்றுதான் நோயாளிக்கு தேவையான சரியான மருந்தை தேர்வு செய்ய உதவும்.

**மருத்துவர் :** தலைவலிக்கு ஒருவருக்கு மருந்து கொடுத்திருப்போம். அவர் என்னிடம் "நீங்கள் கொடுத்த மருந்து எனது தலைவலியை கொஞ்சமும் போக்கவில்லை" என்று கூறிவிட்டால் போதும், “நான் மருந்து கொடுத்து சரியில்லையோ, குணப்படுத்த வில்லையோ, நான் சரியில்லையோ” என்று டென்சன் ஆகிவிடுகிறது. அதற்கு என்ன செய்வது?

**சரவணன் :** நான் ஒரு வேலை செய்துகொண்டு இருப்பதாக வைத்துக்கொள்வோம். என்னுடைய வேலையின் ரிசல்ட் சரியில்லை என்றால் அதன் பொருள் என்ன? வேலை செய்யும் எனது அணுகுமுறை சரியில்லையா? அல்லது நான் சரியில்லையா? நான் என்ன முடிவுக்கு வரவேண்டும்?

**மருத்துவர் :** வேலை செய்யும் அணுகுமுறைதான் சரியில்லை. அணுகுமுறையைத்தான் மாற்ற வேண்டும்.

**சரவணன் :** ஆனால் நீங்கள் என்ன செய்கிறீர்கள். நீங்கள் சரியில்லை என்று கூறுகிறீர்கள். அப்படி தானே?

**மருத்துவர் :** ஆமாம், நான் தான் சரியில்லை என்று முடிவு செய்து விடுகிறேன்.

**சரவணன் :** உங்களை நீங்களே சரியில்லை என்ற முடிவு செய்த பிறகு எப்படி அந்த நோயாளியை சரியான முறையில் அணுகமுடியும்? மாற்றவேண்டிய புதிய அணுகுமுறைக்கு மாறாமல், உங்களை மாற்ற வேண்டும் என்று முயற்சி செய்கிறீர்கள். நம்மை மாற்ற முயற்சி செய்யும் தோறும் நிலைமை இருப்பதை விட இன்னும் கொஞ்சம் மோசமாகி போய்விடுகிறது. நோயாளிக்கு ஓர் அணுகுமுறை சரிவரவில்லை என்றால் அடுத்தடுத்த புதிய அணுகுமுறையைத்தான் அணுக வேண்டும். தவிர உங்களை சரியில்லை என்று ஒருபோதும் எண்ணக்கூடாது. உங்கள் மருத்துவ அறிவுக்கு எட்டிய வரை புதிய புதிய கோணத்தில் முயன்று பார்க்கலாம். நீங்கள் ஒரு நாளைக்கு 20 நோயாளியை பார்க்கிறீர்கள். அதில் ஏதோ ஓர் இரண்டு நபருக்கு புதிய அணுகுமுறை தேவைப்படலாம். உங்கள் துறை சம்பந்தப்பட்ட அறிவை வளர்த்திக் கொண்டும் சக மருத்துவ நண்பர்களுடன் கலந்து ஆலோசித்துக் கொண்டும் உங்களால் முடிந்த அளவிற்கு புதிய அணுகுமுறையை அணுகுவது மட்டும்தான் உங்களை வளர்ச்சிப்பாதைக்கும் அழைத்துச் செல்லும். நீங்கள் சரியில்லை என்று எண்ணும்தோறும் அது உங்களையே முடக்கிவிடுகிறது. நீங்கள் எதற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்ய வேண்டும்.

**மருத்துவர் :** புதிய அணுகுமுறைக்குதான் கவனம் செலுத்த வேண்டும். ஆனால் நான் சரியில்லை என்று ஏன் அப்படி முடிவு செய்து விடுகிறேன்?

**சரவணன் :** நீங்கள் சரியில்லை என்று நீங்களே முடிவு செய்துவிடுவதுதான் காரணம். உங்களை மாற்றுவது என்பது ஒன்று, உங்கள் செயலின் அணுகுமுறையை மாற்றுவது என்பது மற்றொன்று. நீங்கள் என்ன செய்துவிடுகிறீர்கள் என்றால் உங்கள் அணுகுமுறையை மாற்றுவதை விட்டவிட்டு நீங்கள் சரியில்லை என்று முத்திரை குத்திகொண்டு உங்களை மாற்ற முயற்சி செய்கிறீர்கள். உங்களால் உங்களை ஒருபோதும் மாற்ற முடியாது. மேலும் நீங்கள் உங்களையே சரியில்லாத நபர் என்று முடிவு செய்து விட்டால் பிறகு எப்படி நோயாளியை சரியான அணுகுமுறையில் அணுகமுடியும்.

**மருத்துவர் :** என்னுடைய முயற்சி எல்லாமே என்னை சரி செய்வதிலும் என்னுடைய டென்சனை குறைப்பதிலும் மட்டுமே கவனம் செலுத்திவிட்டேன். அதுதான் தவறு என்பது இப்போது நன்றாக புரிகிறது.

**சரவணன் :** எண்ணத்திலிருந்து விடுபடுவதற்காக செயல் செய்யத் தேவையில்லை என்பது முதல் பகுதி. அணுகுமுறையை தான் மாற்ற வேண்டும், நம்மை அல்ல என்பது இரண்டாவது பகுதி. எண்ணத்திலிருந்து விடுபடுவதற்காக ஒருபோதும் செயல் செய்யத் தேவையில்லை. செயல் என்பது வெளித் தேவை என்பதற்காக செய்து கொள்வது மட்டுமே. மற்றபடி நமக்கு ஏற்படும் எண்ணத்திற்கு எந்த செயலும் தேவையில்லை. நமக்கு வெளியில் வேலை இல்லை என்றால் அகத்தில் எண்ணம் எப்படி வேண்டுமென்றாலும் இருந்துவிட்டு போகட்டும் என்று விட்டுவிடுங்கள். உள்ளே எப்படி இருந்தாலும் சரிதான்.

**மருத்துவர் :** சரி தான். நன்றாக இப்போது புரிகிறது. நோயாளியை பார்க்கும் எனது அணுகுமுறையை மேலும் சிறப்பாக அணுகுவது எவ்வாறு?

**சரவணன் :** இருப்பது ஒரே கவனம் தான். உங்களை மாற்றுவதற்கு கவனம் செலுத்தாமல் விட்டுவிட்டால் எஞ்சிய கவனம் முழுவதும் நோயாளியின் பக்கம் தான் திரும்பும். அப்படி உங்கள் கவனம் முழுவதும் நோயாளியின் பக்கம் திரும்பும் போது நோயாளியின் நோயைப்பற்றிய வெளிப்பாடே, நீங்கள் இதுவரை கற்று சேகரித்த அனைத்து மருத்துவ அறிவுகளிலிருந்து உங்களுக்கு தேவையான புதிய அணுகுமுறையை தாமாகவே வெளிப்படுத்தும்.

**மருத்துவர் :** எனக்கு புதிய கோணம் கிடைத்துள்ளது. மிகவும் நன்றி.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. அந்த வகையில் சென்ற நவம்பர் மாதம் 11, 12 ஆம் தேதிகளில் **சென்னை மைலாப்பூரில் அமைந்துள்ள ஸ்ரீனிவாச சாஸ்த்திரி ஹாலில் மிகவும் சிறப்பாக** நடைபெற்றது. இதில் புதிய அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதனை ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம் ஏற்பாடு செய்திருந்தது.

இதனைத் தொடர்ந்து டிசம்பர் மாதம் 9 மற்றும் 10 ஆம் தேதிகளில் **திண்டுக்கல், V.G.S. மீட்டிங் ஹாலிலும்** டிசம்பர் 30, 31 ஆம் தேதிகளில் **சேலம் ஸ்ரீ பகவத் பவனிலும்** இரண்டு நாள் ஞானமுகாம் நடைபெற உள்ளது.

ஞானத் தேடுதல் கொண்ட அன்பர்கள் எவராக இருந்தாலும் ஆன்மிகத்தில் எந்த நிலையில் இருந்தாலும் அவர்கள் ஞான முகாமில் கலந்து கொள்ளும் போது ஞானத் தெளிவு பெறுவது உறுதி.

ஞானம், விடுதலை என்பதையெல்லாம் ஆன்மிகம் சார்ந்ததாக மட்டும் பலரும் கருதி வருகிறார்கள். உண்மையில் இவை ஒட்டுமொத்த மனித குலத்திற்கும் இன்றியமையாதவை. அன்றாட வாழ்வில் நாளுக்கு நாள் அனைவருக்குமே மனப்போராட்டம் அதிகரித்து கொண்டே வருகிறதே தவிர குறைந்தபாடில்லை. மனப்போராட்டம் ஒன்றே அனைத்து பிரச்சினைகளுக்கும் ஆணிவேர். நமது வாழ்வின் வளர்ச்சிக்கு தடையாக இருப்பதுவும் அதுவே. மனப்போராட்டத்திலிருந்து விடுபடுவதையே ஆன்மிகத்தில் விடுதலை - முக்தி என்று குறிப்பிடுகிறோம். விடுதலையை கொடுக்கக்கூடிய புரிதலைதான்-அறிவைதான் மெய் அறிவு-மெய் ஞானம் என்று குறிப்பிடுகிறோம். இப்பிறவியின் நோக்கமே மெய் ஞானம் பெற்று விடுதலையோடு வாழ்வதுதான்.

எல்லா ஆன்மிக அமைப்புகளுமே ஞானத்தை கொடுக்கவே தியானங்களையும் பயிற்சிகளையும் கற்றுக்கொடுத்து வருகின்றன. அதில் எங்கோ லட்சத்தில் ஒரு சிலரே தீவிர பயிற்சி முயற்சிகளை செய்து தோற்று அக சரணாகதி அடைந்து ஞானமடைந்திருக்கிறார்கள்.

ஆனால் ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் புரிதல் என்பது மனதின் இயலாமையை புரிய வைத்து அகச்சரணாகதியை அடைய வைக்கிறது. நமது ஞானமுகாம்களில் திறந்த மனதுடன் கலந்து கொள்பவர்கள் அனைவருமே ஞானத் தெளிவு பெற்று விடுகின்றனர். பகவத் ஐயா வழங்கும் புரிதலில் ஞானத்தெளிவு பெற்றோர் ஏராளமானோர் இருக்கின்றனர். இதற்கெல்லாம் காரணம் மெய் ஞானத்தை ஸ்ரீ பகவத் ஐயா புரிதலாக எளிமையாக கொடுத்ததே ஆகும்.

பல ஆண்டுகள் முயன்றும் கிடைக்காத மெய் ஞானம், பகவத் ஐயா வழங்கும் எளிய புரிதலில் கிடைத்திருக்கிறது. பகவத் ஐயாவால் ஞானம் பெற்ற பலர் தங்களது துயரங்களிலிருந்தும் பிரச்சினைகளிலிருந்தும் விடுபட்டு விடுதலையோடு வாழ்ந்து வருகிறார்கள். இதனை கண்கூடாகவும் பார்த்து வருகிறோம்.

இந்த உண்மையை உணர்ந்த நாம் செய்ய வேண்டிய தலையாய கடமை என்னவென்றால், இவ்வுண்மையை தேடுதல் உள்ள அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும். நாம் ஞான முகாம்களின் மூலம் நூற்றுக்கணக்கானவர்களுக்கு எடுத்துச்செல்கிறோம். ஆனால் இது போதாது. தேடுதல் உள்ள அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும். எனவே அடுத்தக் கட்டமாக நமது ஞான முகாமை 2000 பேர் கலந்து கொள்ளும் அளவிற்கு மிகப்பெரிய நிகழ்ச்சியாக நடத்த இருக்கிறோம். அதற்கான ஏற்பாடாக வருகின்ற **2018 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 2ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை சென்னை அண்ணா சாலையில் அமைந்துள்ள காமராஜர் அரங்கத்தில்** ஒரு முழுநாள் ஞான முகாம் நடத்த எற்பாடு செய்யப்பட்டுள்ளது. இந்த வாய்ப்பு ஞானத்தெளிவை ஆயிரக்கணக்கானோருக்கு எடுத்து சென்று அவர்களின் பிரச்சினைகளுக்கும் துயரங்களுக்கும் நிரந்தர தீர்வு வழங்குவதாக அமையும்.

எனவே இந்த மாபெரும் முழுநாள் ஞானமுகாமில் நாம் அனைவரும் கலந்து கொள்வதோடு தேடுதல் உள்ள அனைவரையும் கலந்து கொள்ள செய்வது நம் அனைவரின் கடமை.

# ஸ்ரீ பகவத் பவன் புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணைவீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **விரன்சுப்பு** (எ) **இராஜேஷ்.** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை
4. திருமதி **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி
6. திரு. **அஃகு ஹீலர் உமர் ஃபாரூக்,** கம்பம்
7. திரு. **சேகர்,** கத்தார்
8. திரு. **குணாலன்,** கோவை
9. திரு. **சம்பத்,** சென்னை
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்திவேலூர்
13. திரு. **பாரதிராஜா,** பரமத்திவேலூர்
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்
15. திரு. **முரளி,** சென்னை
16. திரு. **வீரப்பன்,** நெல்லை
17. திரு. **அருணாச்சாலம்,** நெல்லை
18. திருமதி **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை
19. திருமதி **வடிவம்மாள்,** சென்னை
20. திரு. **ஹீலர் சுரேஷ்,** சென்னை
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை
22. திரு. **ஸ்ரீபகவத்மிஷன்,** வெஸ்ட்மாம்பலம் சத்சங்கம்
23. திரு. **கார்த்திக்,** போரூர், சென்னை
24. திரு. **ஆனந்த் V. ராயன்,** திருச்செந்தூர்
25. திரு. **யுகேஷ்குமார்,** சென்னை
26. திரு. **P. சௌந்தரராஜன்,** சென்னை
27. திரு. **D. சந்திரசேகர்,** சென்னை
28. திரு. **நந்தகோபால் நாராயணன்** USA
29. திரு. **பாபு,** காட்பாடி, வேலூர்
30. திரு. **K. முருகானந்தன்,** திருப்பூர்
31. திரு. **P.R. குமார்,** எர்ணாகுளம்
32. திருமதி **மாலா மங்களேஸ்வரன்,** லண்டன்
33. திரு. **செந்தில் ஜெயபாலன்,** பெங்களூரு
34. திரு. Javis Arul jeraid Arul Samy, Dubai
35. திரு. **பாண்டிபரமசிவம்,** சென்னை
36. திரு. **T.M.K. தியாகராஜன்,** சென்னை
37. திரு. **A. ராஜமாணிக்கம்** (MRS Yarns) சேலம்
38. திரு. **இரவிச்சந்திரன்,** வெஸ்ட்மாம்பலம், சென்னை
39. திரு. **பாலமுருகன்,** USA
40. திருமதி **சுரபி,** டெல்லி
41. திரு. **முருகவேல்,** சென்னை
42. திரு. **சதானந்தம்,** திருச்செங்கோடு
43. திருமதி **சாந்தி,** கோவை
44. திருமதி **சாந்தி,** நாகப்பட்டணம்

புரவலர்களாக தங்களை இணைத்துக்கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



சென்னை ஞான முகாமில்



வெஸ்ட் மாம்பலம் ஸ்ரீ பகவத் மிஷினில்
பகவத் ஐயாவுடன் பாலசுந்தரம் ஐயா



சென்னை ஞான முகாமில்





சென்னை மேடம்பாக்கம் சிவக்குமார் ஐயா வீட்டில் ஸ்ரீ பகவத் ஐயா



ஜருகு மலைப்பகுதியில் மாலை நேர
நடைப்பயணத்திற்கு பிறகு ஓய்வு



சென்னை அம்பத்தூர் சத்சங்கம்

# சென்னை ஞான முகாம்



சென்னை, மைலாப்பூரில் அமைந்துள்ள ஸ்ரீனிவாச சாஸ்த்திரி A/c ஹாலில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 2 நாள் ஞான முகாம் சென்ற நவம்பர் மாதம் 11, 12 ஆம் தேதிகளில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இதில் ஞான தேடுதல் கொண்ட 80 புதிய அன்பர்கள் உட்பட நூற்றுக்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர்.

இதில் கலந்துகொண்ட புதிய அன்பர்கள் அனைவருக்கும் ஐயாவின் உரை ஞானத் தெளிவு பெறுவதற்கு எளிமையாகவும் புதிய அணுகுமுறையாகவும் அமைந்திருந்தது.

இரண்டுநாள் ஞானமுகாம் நிகழ்ச்சி முழுவதையும் Google Hangouts மூலம் Youtube-ல் நேரடி ஒளிபரப்பு செய்ததுடன் Bagavath Pathai என்ற Youtube Account ல் பதிவும் செய்யப்பட்டுள்ளது. இதற்காக கனடாவில் உள்ள நமது அன்பர் திரு. **ஜெயராம்** அவர்களும் சென்னை அன்பர் திரு. **ஆனந்த்** அவர்களும் மிகவும் சிறப்பாக பணியாற்றினார்கள்.

ஞான முகாமின் இரண்டாம் நாள் இறுதியில் டிசம்பரில் வெளிவர இருக்கும் ஐயாவின் புதிய நூலான "**ஸ்ரீ பகவத் பாதை**" என்ற நூலினை பரிசில் விலையில் வெளியிடுவதற்காக ரூ.10000/- நன்கொடையாக வழங்கிய திரு. **ஹேமபிரபாகரன்,** திரு. **மாரிமுத்து,** திரு. **சுரேந்திரன்,** திரு. **ஜெகதீஷ்வரன்,** திரு. **பாலாஜி,** திரு. **சபாபதி,** திரு. **முரளி கண்ணன்,** கோவை, திருமதி **ஹேமா,** USA, திருமதி **சாந்தி,** USA, திரு. & திருமதி. **லதா வெங்கடேஷன்** ஆகிய அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஞான முகாம் நடைபெற்ற அரங்கம் சுற்றியும் ஐயாவின் ஞான வாசகங்கள் வைக்கப்பட்டிருந்தன. அதை வந்திருந்தவர்களின் சிந்தனையைத் தூண்டியதோடு அனைவரையும் கவர்ந்தது.

இந்த இரண்டு நாள் ஞானமுகாம் கலந்து கொண்ட அனைவருக்கும் பயனுள்ள வகையில் சிறப்பாக அமைந்திருந்தது. இதனை ஏற்பாடு செய்ததோடு சிறந்த முறையில் செயலாற்றிய ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத் தலைவர் திரு. **இரவிச்சந்திரன்** மற்றும் இவருக்கு துணை நின்ற துணைவியார் திருமதி **ஹேமலதா இரவிச்சந்திரன்** அவர்களுக்கும் மேலும் சிறப்பாக செயலாற்றிய சென்னை திரு. **தியாகராஜன்,** திருமதி **முத்துலட்சுமி சரவணன்,** திரு. **ஆனந்த்,** திரு. **விபாகரன்,** திரு. **சித்தார்த்,** திரு. **சீத்தாராமன்,** திரு. **மாரிமுத்து,** திரு. **ராம்லால்,** திரு. **பெருமாள்சாமி,** திரு. **பாலசுப்ரமணியம்,** திரு. & திருமதி **முரளி பிரபா,** திருமதி **நிருபமா,** திரு. **பிரதீப்,** திரு. **ஸ்ரீதர்,** திரு. **சிவக்குமார்,** திரு. **சபாபதி,** திரு. **சாய் விக்னேஷ்,** திரு. **தீபக்,** திரு. **சம்பந்தமுதலியார் - வடிவம்மாள்** தம்பதியர், திரு. **முருகவேல்,** திரு. **வெங்கடேசன்** IOC, மதுரை திரு. **சிவக்குமார்,** திரு. **பாண்டிபரமசிவம்,** திரு. **கோதண்டபாணி** - குன்னூர், திரு. **பாலசுந்தரம்** மற்றும் சென்னை அன்பர்கள் அனைவருக்கும் பயனடைந்தவர்கள் சார்பாகவும் பாதையில் பயணிக்கும் நம் அனைவரின் சார்பாகவும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# மதுவை எதிர் / ஆதரி க்காதே

## ஜென் கதை

மனநிலை பாதிக்கப்பட்ட பலருக்கு வைத்தியம் பார்க்கும் சிறப்பு மனநல மருத்துவர் அவர். பல மனோதத்துவ நூல்களை படித்தவர். அவர் படித்த மனோ தத்துவங்கள் அவருடைய சொந்த பிரச்சினைக்கு உதவவில்லை. அவரது பிரச்சினை, மனநிலை பாதிக்கப்பட்டவர்கள் பலரையும் காலை முதல் இரவு வரை பார்ப்பதனால் ஏற்படும் மன இறுக்கத்தைப் போக்கிக் கொள்ள கொஞ்சம் மது எடுத்துக்கொண்டு உறங்கும் நிலையில் இருந்தார். இதனால் அவர் உடல்நிலையும் பாதித்து விட்டது. உடலுக்கு கெடுதல் என்பது அவருக்கு நன்றாக புரிகிறது. "மருத்துவராகிய நானே இப்படி இருக்கின்றேனே" என்று தனக்குள்ளே புழுங்கித் துடித்தார். அவர் கற்ற அறிவு அவரை மதுவிலிருந்து மீட்க உதவவில்லை. 'நம்மால் இதிலிருந்து மீளவே முடியவில்லையே' என்று மிகவும் வருந்தினார். மதுப்பழக்கத்திலிருந்து விடுபட கடுமையாக முயன்றார். கோயில்களுக்கு எல்லாம் சென்றார். பல ஆன்மிக முயற்சிகளை மேற்கொண்டார். மதுவிலிருந்து விடுபடுவதற்காக எழுதப்பட்டிருந்த பல நூல்களை படித்து அதிலிருந்த வழிமுறைகளை பின்பற்றினார். எல்லா முயற்சிகளிலும் தோல்வியே ஏற்பட்டது.

மருத்துவர், 'தன்னால் இந்த பழக்கத்திலிருந்து மீளவே முடியவில்லையே' என்று மிகவும் மனமொடிந்த நிலையில் ஓர் ஞானியை சந்தித்து தன்னுடைய நிலையை எடுத்துக் கூறினார்.

ஞானி அமைதியாக கேட்டுக்கொண்டிருந்துவிட்டு "என்னுடன் கொஞ்ச நாட்கள் தங்கி இருங்கள்" என்றார்.

எப்படியாவது வெற்றி கொள்ள வேண்டும் என்று "சரி ஐயா" என்றார் மருத்துவர்.

முதல் நாளை மெல்ல தாக்குப்பிடித்து கழித்தார். ஆனாலும் மனதில் மதுவின் நினைவாகவே இருந்தது. அடுத்த நாள் ஞானியிடம் "என்னால் மது அருந்தாமல் இருக்க முடியாது. என்னை மன்னியுங்கள்" என்றார் மனவருத்தத்துடன் மருத்துவர்.

"அவ்வளவு தானே! இங்கு தடை ஏதும் இல்லை தாராளமாக அருந்துங்கள்" என்று கூறிவிட்டு "இந்த பழக்கம் எப்படி ஏற்பட்டது"? என்று கேட்டார் ஞானி.

“தொடக்கத்தில் மனநிலை பாதிக்கப்பட்டவர்கள் பலரையும் பார்ப்பதினால் மனச்சோர்வு ஏற்பட்டது. அதிலிருந்து விடுபடுவதற்காக வாரம் ஒரு முறை மது எடுத்து வந்தேன். பிறகு நாட்கள் 5, 4, 3,2,1 என்று படிப்படியாக குறைந்து தினமும் இரவு எடுத்தேயாக வேண்டிய நிலைக்கு வந்துவிட்டேன்” என்றார் மருத்துவர்.

"நீங்கள் முதலில், வாரம் ஒருமுறை தானே மது அருந்தினீர்கள் பிறகு அது எப்படி தினத்திற்கு மாறியது" என்றார் ஞானி.

“ஞாயிற்றுகிழமை மதியத்திலிருந்து ஓய்வு எடுத்துக் கொண்டு மாலை மது எடுத்துக் கொள்வதை வழக்கமாக வைத்திருந்தேன். அடுத்த நாள் திங்கட்கிழமை, முதல்நாள் மது எடுத்துக்கொண்டதால் ஏற்பட்ட உடல் சோர்வு, தலைபாரம் போன்றவையால் ‘இனி மது அருந்தக்கூடாது, உடல் நலத்திற்கு கேடு, மருத்துவராகிய நாம் மதுவை நம்முடைய கட்டுப்பாட்டில் வைக்க வேண்டும்’ என எனக்கு நானே உறுதிமொழி எடுத்துக்கொள்வேன். அடுத்தடுத்த நாட்களில் 'மதுவை வெல்வது எப்படி' போன்ற நூல்களை படிப்பேன். வியாழக்கிழமையிலிருந்து நிலைமை கொஞ்சம் தலைகீழாக மாறும். ‘மது அருந்தினால் மனமும் உடலும் எவ்வளவு தளர்வாக இருக்கும். எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்’ என்று மனம் சொல்ல ஆரம்பித்துவிடும். இருந்தாலும் எனக்குள்ளே மது அருந்துவது தவறு என்று ஒருபுறம், மது அருந்தினால் உடலும், மனம் தளர்வாக இருக்கும் என்று இன்னொருபுறம் மாறி மாறி மனப்போராட்டத்தை ஏற்படுத்தும். இறுதியாக எப்போது ஞாயிற்றுகிழமை வரும் நாம் மது அருந்தி சற்று ஒய்வாக இருக்கலாம் என்று நினைப்பேன்...

"மது அருந்திய பிறகு, இப்படி மது அருந்திவிட்டோமே, இதிலிருந்து மீளவே முடியாதா என்ற குற்ற உணர்வு தோன்றி மனதைக் கொல்லும்," என்று கூறி கொண்டே "நான் கொஞ்சம் மது எடுத்துக்கொள்கிறேன்" என்று கூறி வேகமாக பாட்டிலை திறந்து இரண்டு முறை குடித்துவிட்டு வைத்தார் மருத்துவர்.

ஞானி மருத்துவரை அமைதியாக பார்த்துக்கொண்டு இருந்து விட்டு "சரி இப்போது நீங்கள் மது அருந்திவிட்டீர்கள், இனி மனப்பதட்டம் இன்றி நான் கூறுவதை நிதானமாக கேட்கலாம் தானே" என்றார்.

"நிச்சயம் ஐயா" என்றார் மருத்துவர் மிகவும் வருத்தத்துடன்.

"உங்கள் பழக்கத்திற்கு காரணமான ஆணிவேர் எது என்பதை கண்டுபிடித்து விட்டேன்" என்றார் ஞானி.

"அப்படியா? என்னால் கூட மதுவிலிருந்து மீள முடியுமா?" என்றார் மருத்துவர்.

"நிச்சயமாக, முதன்முதலில் மது அருந்தும் போது மனமும், உடலும் தளர்வதை உணர்ந்தாய். அந்த அனுபவம் மனதிற்கு மிகவும் பிடித்து போய்விடுகிறது. பிறகு அதே அனுபவம் வேண்டும் என்று மனம் தீவிரமாக நாடுகிறது. "அதே நேரம் மதுவினால் ஏற்படும் உபாதைகளையும் மனம் காட்டுகிறது. மனமே வேண்டும் என்றும் கூறுகிறது, கெடுதல் என்றும் கூறுகிறது. மது வேண்டும் என்று நேர்முகமாகவும் கெடுதல் என்று எதிர்மறையாகவும் மாறி மாறி மதுவையே மனம் நினைத்துக்கொண்டு இருக்கிறது. இப்படி நினைத்துக் கொண்டிருப்பதால் உடல் அளவில் இரசாயன மாற்றம் ஏற்பட்டு பிறகு உனது கட்டுப்பாட்டை எல்லாம் மீறி மதுவை வேகமாக குடிக்கும் நிலைமைக்கு நீ சென்று விடுகிறாய். இவை அனைத்திற்கும் உன் மனப்போராட்டமே மூலக் காரணமாக அமைகிறது” என்றார் ஞானி.

"ஐயா கொஞ்சம் புரிகிறது, இன்னும் கொஞ்சம் விளக்கமாக கூறுங்கள்" என்றார் மருத்துவர்.

"பொதுவாக மதுவை அருந்துவதற்கு நீங்கள் எடுத்துக் கொள்ளும் செயலின் நேரம் எவ்வளவு?" என்றார் ஞானி.

"சுமார் 10 முதல் 15 நிமிடங்களே அதிகம்" என்றார் மருத்துவர்.

"15 நிமிட செயலான மது அருந்துவதற்காகும் நேரம் போக, மீதி நேரங்கள் முழுவதும் 'மது வேண்டாம் தவறு', 'மது வேண்டும் மகிழ்ச்சி தரும்' என்று மனதால் நேர்முகமாக மறைமுகமாக என தொடர்ந்து போராடுவதுதான் மீண்டும் மது அருந்தும் செயலுக்கு ஆதாரமான வித்தாக இருக்கிறது. இங்கு இருக்கும் நாட்களில், மது வேண்டும் என்று தோன்றிய உடனே எந்த அவசரமும், குற்ற உணர்வும் இன்றி எவ்வளவு ரசித்து, மகிழ்ந்து, நிறைவாக அனுபவித்து, குடிக்க முடியுமோ அப்படி குடியுங்கள். இரண்டாம் முறை மது தேவைப்படாது. முதல் முறையே போதும் என்ற மனநிறைவைத் தரும். மதுவை வெற்றிகொள்ள வேண்டும் என்ற மனநிலையிலிருந்தும் முழுவதுமாக விடுபடுங்கள். மதுப்பழக்கம் இருந்தாலும் சரி, இல்லாமல் போனாலும் சரி என்று எதிர்த்தோ, ஆதரித்தோ எதையும் செய்யாமல் அதை முழுவதுமாக மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு கடந்து விடுங்கள்" என்றார் ஞானி.

ஞானியின் பேச்சும், அணுகுமுறையும் மருத்துவருக்கு குற்ற உணர்வை முதலில் போக்கியது. 10 நிமிட செயல் நேரம் போக மற்ற 'நேரங்களில் வேண்டும், வேண்டாம், இன்பம், துன்பம்' என மனதில் மதுவையே நினைத்துக் கொண்டு இருப்பதுதான் இந்த பழக்கத்தின் ஆணிவேர் என்பதைப் புரிந்து கொண்டார். மருத்துவரின் மனதிலிருந்து பெரிய சுமை இறங்கியது போல் இருந்தது.

அடுத்தடுத்த நாட்கள் ஞானியுடன் உரையாடி பழக்கத்திற்கு மூலக் காரணமான ஆணிவேர் **‘மனப்போராட்டம் தான்’** என்பதை நன்றாக புரிந்து கொண்டார் மருத்துவர்.

தங்கியிருந்த கொஞ்ச நாட்களில் மது வேண்டும் என்ற தீவிர வெறித்தன்மையும் படிப்படியாகக் குறையத் தொடங்கியது. மது அருந்திய பிறகு ஏற்படும் குற்ற உணர்ச்சி முழுவதுமாக நீங்கியது. மது பழக்கத்திற்கு காரணமான மனோ ரீதியான ‘வேண்டும், வேண்டாம்’ என்ற இரண்டு பகுதிகளும் வலுவிழந்தது. இரண்டு முறை மது எடுத்துக் கொள்வதிலிருந்து ஒரு முறை எடுத்துக்கொள்வதே போதுமானதாக இருந்தது. பிறகு அதுவும் படிப்படியாக குறையத் தொடங்கி, மது தேவைப்படாத நிலைக்கு தாமாகவே வந்துவிட்டார்.

தினமும் ஞானியுடன் வெகு தூரம் நடைப்பயணத்தை மருத்துவர் மேற்கொண்டார். மனதை பற்றிய பல விசயங்களை விவாதித்து தெரிந்து கொண்டார்.

இதுவரை புரியாத மனதின் அதி நுட்பமான ஆணிவேரான மனப்போராட்டத்தின் இயக்கத்தை நன்றாக புரிந்து கொண்டு ஞானியிடமிருந்து நிறைவாக விடை பெற்றார் மருத்துவர்.

**“மனப்போராட்டமே அனைத்து பிரச்சினைகளுக்கும் ஆணிவேர்”**

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555